65

# என்ன வேண்டும்?

பார்வதி இரவெல்லாம் தூங்கவில்லை; முன் நேரமெல்லாம் அழுதாள். இரண்டு மணிக்குமேல் தூக்கம் வரவில்லை. கடிகாரம் மணியடிப்பதை எண்ணினாள். ஐந்து அடித்ததும் எழுந்து வெளியே வந்தாள். சிவராமன் இரவு நாற்காலியில் படுத்தபடியே தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டாள்.

பல் தேய்த்துக் கொண்டு வாசலில் கோலமிடப் போனாள். மனத்தில் எவ்வளவோ எண்ணங்கள் எப்படி எப்படியோ வெகு வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. கை பாட்டிற்குப் பாதித் தெருவை அடைக்கும் பெரிய புள்ளிக்கோலமாக ஒன்றைப் போட்டுக்கொண்டுடிருந்தது. கண் பாட்டிற்குத் தெருவில் அந்த அதிகாலை வேலையில் நடைபெற்ற சம்பவங்களைக் கவனித்துக்கொண்டிருந்தது.

பால்காரி கிளப்புக்குப் பால் கறக்கப்போகும் அவசரத்தில், வழியில் எச்சிலைகளை மேயப்போன மாட்டை அடித்துத் துரத்திக்கொண்டு போனாள். கன்று நடக்கமாட்டாமல் பின்னால் ஊர்ந்து கொண்டே போயிற்று. இரண்டு நாய்கள் வெகு குதூகலமாக ஒன்றை யொன்று வேடிக்கையாகக் கடித்துக்கொண்டும் துரத்திக்கொண்டும் இருந்தவை திடீரென்று உண்மையாகச் சண்டையிட ஆரம்பித்தன. விளையாட்டில் ஒன்றின் பற்கள் மற்றொன்றின் உடலில் கொஞ்சம் பலமாக ஊன்றி விட்டன.

தெருக் கூட்டும் தோட்டி, இரண்டு வாசல்கள் தள்ளி வாருகோலோடு நின்றான். அவன் மனைவி அவன் பக்கத்தில் குப்பைக் கூடைக்கு அருகில் உட்கார்ந்து மடியிலிருந்து வெற்றிலைபாக்குப் பையை எடுத்து ஒரு பாக்குத் துண்டையும் ஒரு வெற்றிலையையும் வாயில் போட்டுக் கொண்டு சிறிய சுண்ணாம்பைச் சின்ன உருண்டையாக உருட்டிப் போட்டாள். அவளுக்குப் பின்னால், பக்கத்தில் இரண்டு வயசுக் குழந்தை; வயிற்றில் ஒரு குழந்தை. இருபது வயசு இருக்கும் அவளுக்கு.

*கலைமகள், ஏப்ரல்-1943.*

தேகம் மினுமினுவென்று இருந்தது. அள்ளிச் செருகியிருந்த மயிர் தலைக்கு மிஞ்சி இருந்தது. முகத்தில் யௌவனத்தின் நிறைவு இன்னும் குறையவில்லை.

'பொவெலெ கொஞ்சம் குடு!' என்றான் அவன்.

'பொவெலையா? இல்லையே!' என்று பையைத் துழாவினாள் அவள்.

'நீ இருக்கற எடத்துலே என்னாதான் இருக்கும்!' என்று அவன் எரிந்து விழுந்தான்.

'இருக்குதான்னு பாக்கறேன்!' என்று சொல்லிக்கொண்டே அவள் சிறு புகையிலைத் துண்டு ஒன்றை வெளியே எடுத்து, 'இந்தா இருக்குது!' என்று நீட்டினாள்.

'அவ்வளவுதான் இருக்கா? சரி, நீ போட்டுக்க!' என்று சொல்லி விட்டு அவன் கூட்ட ஆரம்பித்தான்.

'உக்காந்து, ஒரு சரகு இருக்கு, போடு; நான் கூட்டிக்கிட்டு வாறேன்' என்று அவள் எழுந்தாள்.

'சரித்தாங்கறேன், நீ உக்காரு, நொடியிலே அரிச்சுக் கிட்டு வந்திடறேன்!' என்று அவன் வேகமாகக் கூட்ட ஆரம்பித்தான்.

அவள் உல்லாஸமாக அந்தக் குப்பையில் உட்கார்ந்து குழந்தையுடன் குலாவ ஆரம்பித்தாள். முகத்தில் திருப்தியும் சந்தோஷமும் தாண்டவமாடின. உரக்கச் சிரித்துக்கொண்டு விளையாடினாள்.

புகையிலைக் காம்புக்குத் தடவல்! புருஷன் எரிந்து விழுந்தான். அவள் முகமலர்ச்சி குலையவில்லை. அவனும் அவளை வேலை செய்யவிடவில்லை.

பார்வதி பார்த்துக்கொண்டே கோலம் போட்டாள்–கை போட்டது; மனம் தடுமாறிக்கொண்டிருந்தது.

பார்வதிக்கும் கிட்டத்தட்ட அந்த வயசுதான்; ஆனால் அவள் உடல் தாங்காதபடி யௌவனத்தின் செருக்கு அதில் தத்தளித்துக் கொண்டிருந்தது. பிறந்தகத்தில் சீரும் செல்வமுமாக வளர்ந்தாள். வாழ்க்கைப் பட்ட பிறகும் பெற்றோர்கள் வேண்டியதைச் செய்தார்கள். அவள் கணவன் சிவராமன் டிபுடி கலெக்டர் ஆபீஸில் ஹெட் கிளார்க். முதலிலேயே ரெவினியூ இன்ஸ்பெக்டராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவனாதலால் இருபத்தாறாம் வயசிலேயே எண்பது ரூபாய்ச் சம்பளத்துடன் அந்தப் பதவியில் இருந்தான். அவளுக்கு ஏற்ற புருஷன் தான். அவன் தேகக்கட்டும் முகக்கவர்ச்சியும் உள்ளவன். கிராப் தலை, காதுகளில் வைரக் கடுக்கன்கள். டிபுடி கலெட்டருக்கு அவனிடத்தில் வெகு மதிப்பு, நம்பிக்கை. அவன் எது எழுதிவைத்தாலும் கையெழுத்துப் போட்டுவிடுவார்.

அன்று சிவராமன் இரவு எட்டு மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தான்.

வந்ததும் வாய்பேசாமல் சாப்பிட்டுவிட்டு நிலா முற்றத்தில் போய், சாய்வு நாற்காலியில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டான். ஆபீஸில் வேலை செய்த சிரமம்; மேலும் என்ன என்ன 'அர்ஜண்ட்' காகிதங்கள் பாக்கி என்ற யோசனை.

அதெல்லாம் பார்வதிக்குத் தெரியும்; ஆகையால் சாப்பாடு முடிகிற வரையில் அவளும் ஒன்றும் பேசவில்லை. தானும் சாப்பிட்டுவிட்டு, கைக் காரியங்களை முடித்துக்கொண்டு வந்து தாழ்வாரத்தின் ஓரமாக அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். சிவராமன் கண் திறக்கவில்லை.

'என்ன, கண்களை மூடிக்கொண்டு யோசனை? யோகம் கீகம் செய்கிறீர்களோ?' என்று சொல்லிக் கொண்டே வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவ ஆரம்பித்தாள்.

சிவராமன் கண் திறந்தான்.

'உன் வேலையும் ஆச்சா?இன்று ஆபீஸில் வேலை கடுமை. பகல் பூராவும் அவன் முன்பு நின்று நின்று காலே போய்விட்டது. ரொம்ப சிரமமாக இருக்கிறது!' என்று சொல்லிக்கொண்டே நிலா வெளிச்சத்தில் மின்னிக்கொண்டிருந்த முகத்தைப் பார்த்து, சட்டென்று ஒருவிதமான ஆறுதலும் திருப்தியும் அடைந்தான். சிரமங்கூடச் சிறிது தீர்ந்ததுபோல இருந்தது அவனுக்கு.

'பார்வதி, இப்படி வாயேன்! நாற்காலியின் கையில் உட்காரேன்!'

பார்வதி இடத்தை விட்டு எழுந்திருக்கவும் இல்லை; பதிலும் சொல்லவில்லை.

'கஜான்சி'க்குப் போவோமா இப்பொழுது?' என்றாள்.

'கஜான்சி' படம் மதுரையில் மூன்று வாரங்கள் ஓடியது. கடைசியாக முதல் நாள் இரவு ஓடிவிட்டது என்று சிவராமனுக்கு மத்யான்னந்தான் ஆபீஸில் தெரிந்தது. அவனுக்கு அந்தத் தகவல் மிகவும் ஏமாற்றமாகப் போய்விட்டது. பார்வதி அதைப் பார்க்கப் போகவேண்டும் என்று அது வந்தது முதல் அவனை அரித்துக்கொண்டு இருந்தாள்; 'குறைந்தது இந்த ஊரில் பத்துப் பதினைந்து வாரங்களாவது ஓடும், போவோம்' என்று சிவராமன் சொல்லிக்கொண்டு வந்தான். முன்பே போயிருக்கலாம். ஜமாபந்தி நெருங்கி இருந்ததால் ஆபீஸில் வேலை அதிகம். சாவகாசம் இல்லை. அடுத்த ஞாயிற்றுக்கிழமை எப்படியாவது கூட்டிக்கொண்டு போய்விடுவது என்று தீர்மானித்திருந்தான். இவ்வளவு சீக்கிரமாக அது போய்விடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. பார்வதி, 'போவோமா?' என்றதும் சிவராமன் முகம் அசடு தட்டிவிட்டது.

ஆனால் அப்போது படம் போய்விட்டது என்று பார்வதியிடம் சொல்ல அவனுக்கு மனம் வரவில்லை. சொன்னால் அந்த நிலவும் அவள் முகமும் தன் மகிழ்ச்சியும் என்ன ஆகும் என்று யோசித்தான். அன்று என்னவோ காரணமின்றி அவன் மனைவியின் முகம் மிகவும்

கவர்ச்சி பெற்று விளங்கினதுபோல அவனுக்குப் பட்டது. சற்று அங்கே நிம்மதியாகச் சாய்ந்த வண்ணம் அவளைப் பக்கத்தில் உட்கார்த்திக் கொண்டு சாயுஜ்ய சுகத்தை அநுபவிக்கவேண்டும் என்று ஆவல் ஏற்பட்டது. பொய் சொன்னான்.

'நாளைக்குக் கட்டாயம் போவோம்; இங்கே வா என்றேனே!' என்றான்.

பார்வதியின் முகத்தில் ஒரு விபரீதமான திருப்தி தோன்றிற்று.

'எனக்காக நாளைக்கு இருக்கச் சொல்லியிருக்கிறீர்களா?' என்று கடுமையாகக் கேட்டாள்.

சிவராமன் ஒரு நிமிஷம் பதில் சொல்ல முடியாமல் தவித்தான்.

'போய்விட்டதா? யார் சொன்னார்கள் உனக்கு?' என்றுதான் அவன் சொல்லவேண்டியிருந்தது.

'போகாமல் எனக்காக நிற்குமா? – டிபுடி கலெக்டர் ஆபீஸ் ஹெட் கிளார்க்கின் சம்சாரம் பார்க்கவில்லையே என்று!'

'இதோ பார், பார்வதி ' என்று சிவராமன் நிலைமையைச் சீர்திருத்த எழுந்து உட்கார்ந்தான்.

பார்வதி அவன் சொன்னதையே காதில் போட்டுக்கொள்ளாமல் அசட்டையுடன் குனிந்த வண்ணமே, 'என்ன பார்க்கிறது! ஊரெல்லாம் பார்த்தாயிற்று; அடுத்த வீட்டுக்காரர்கள் கூட நேற்றுக் கடைசி ஆட்டத் திற்குப் போய்விட்டு வந்தார்கள். எனக்கு எப்படித் தெரியும்–தெரிந்தே வெறுமனே–' என்று முடிப்பதற்குள் சிவராமன் குறுக்கிட்டான்.

'இந்தா பார்வதி, நீ பாட்டிற்கு வாய்க்கு வந்ததைப் பேசிக் கொண்டே போகாதே! இதற்குள் அது போய்விடும் என்று எனக்குத் தெரியாது.'

'போய்விட்டது என்றும் தெரியாதோ?' என்று பார்வதி ஏதோ பிசாசு பிடித்தவள்போல் அவனை மடக்கினாள்.

சிவராமனுக்கு கோபம் வந்துவிட்டது. சிவராமன் மனநிலையை அறிந்துகொள்ளாமலோ, அல்லது அறிந்துகொண்டுதான் அவனைத் துன்புறுத்தவேண்டும் என்று நினைத்தோ, பார்வதி நெருக்கடியை உண்டாக்கிவிட்டாள். அப்பொழுதும் சிவராமன் பதில் சொல்லவில்லை.

'யார் சொன்னார்கள், போகாது, இருக்கும், இருக்கச் சொல்லி யிருக்கிறேன் என்றெல்லாம் சொன்னீர்களே இப்பொழுது' என்று பார்வதி மேலும் குத்தினாள்.

'கூட்டிக்கொண்டு போவதும் போகாமலிருப்பதும் என் இஷ்டம்; சௌகரியம். தெரிந்ததா?' என்று சிவராமன் அவ்வளவு நேரம் பொறுமை யுடன் மௌனமாக இருந்தவன் மிகவும் அதிகப்படியாகச் சொல்லி விட்டான்.

'இப்பத்தானா தெரியப் போகிறது? ஐந்து வருஷங்களாகத் தெரியுமே!'

'என்ன தெரியும்?'

'என்னவா உங்கள் இஷ்டமும் சௌகரியமுந்தான் இந்த வீட்டில் என்பது.'

'பார்வதி, வார்த்தைகளைக் கொட்டாதே. அவற்றின் அர்த்தத்தை அறிந்து பேசு!'

'அறிந்து பேசிப் பேசித்தான் கிடக்கு. நான் வார்த்தைகளைக் கொட்டுகிறேன், நீங்கள்?' என்று பார்வதி முதல் தடவையாக ரோஷத்துடன் கணவன் முகத்தைப் பார்த்தாள்.

'நான் உன்னுடன் இப்பொழுது பேசத் தயாரில்லை!'

'இப்பொழுதுதானா என்ன, எப்பொழுதுந்தான்!' என்று மறுபடியும் குனிந்துகொண்டாள்.

'இதற்காகத்தானா இங்கே வந்து உட்கார்ந்தாய்!'

'ஆமாம், இதற்காகத்தான் வந்து உட்கார்ந்தேன்!'

'சீ, எழுந்து போ!'

இந்த வார்த்தைகள் சிவராமனை அறியாமல் வெளியே வந்துவிட்டன.

பார்வதி சட்டென்று அவன் முகத்தைப் பார்த்தாள். கையில் இருந்த வெற்றிலைகளைத் தட்டில் விட்டெறிந்து விட்டு, எழுந்து உள்ளே போய் விட்டாள்.

கோலப் புள்ளிகளை வேகமாகச் சேர்த்துக் கொண்டே பார்வதி யோசித்தாள்:

'நான் என்ன சொன்னேன், அவர் அப்படிச் சீறி விழுந்தார்? படம் போய்விட்டது என்றேன். அதில் என்ன தப்பு?'

பார்வதி அவ்வளவுதான் – அந்த வார்த்தைகளையே–சொன்னதாக எண்ணினாள். அதற்குமேல் ஒன்றும் சொன்னதாகவே அவளுக்குத் தோன்றவில்லை; நினைவு இல்லையோ?

'இந்தத் தோட்டி ஏன், மனைவிமேல், எரிந்து விழுந்தான்? புகையிலை இருக்காது என்று, அது கூடச் சந்தேகமாகத்தானே சொன்னாள்? அதற்குள் அவன் எரிந்துவிழுந்தான். அவள் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.'

அவள் முகம் கோணிக் கோபித்துக்கொண்டிருந்தால் என்ன பதில் சொல்லியிருப்பாள் என்று யோசித்தாள்.

'என்னெ நீ வச்சிருக்கற லச்சனத்துக்கு ஒனக்கு வாய் வேறயா?' என்ற மாதிரி கேட்டு இருப்பாள்–தன்னைப்போல.

'சீ களுதை, வாயெ மூடு!' என்றிருப்பான் அவன் – தன் கணவனைப் போல.

அப்படியே போயிருக்கும். ஆனால் அவள் பதில் சொல்லவில்லை.

'நான் சொன்னேன்!... ஏன் சொன்னேன்?... அவள் ஏன் சொல்லவில்லை? சொல்லக்கூடாதோ? ஏன் கூடாது?'

இந்தச் சிக்கலான இடத்தில் கை கூடச் சற்று நின்றுவிட்டது; நினைவே

நின்றுவிட்டது.

'அம்மா, அம்மா, நகருங்க!' என்றான் ஒரு வண்டிக்காரன்.

படியோரம் நகர்ந்து நின்று வண்டி போன பின்பு கோலத்தை வேகமாகப் போட்டாள்.

'பதில் சொல்லலாம். சொன்னால் அழுகையும் தூக்கமில்லாமை யுந்தான். சொல்லாவிட்டால் அன்பு, ஆதரவு, உல்லாஸம், மகிழ்ச்சி– எல்லாம்!'

'ஆமாம், நான்தான் சொன்னேன். அவர் ஏன் சும்மா இருக்கக் கூடாது?'

சிவராமன் சும்மா இருக்கவில்லை என்று பார்வதி நினைத்தாள். அவன் எவ்வளவோ முயன்றும், தான் அவனைச் சும்மா இருக்க விடவில்லை என்பது அவளுக்குத் தெரியவில்லையா, அல்லது மறந்து விட்டளா?

'அவர் ஏன் சும்மா இருக்கக் கூடாது?' என்றுதான் அவள் உள்ளத்தில் கேள்வி கோலக் கோடுபோல் திரும்பித் திரும்பி வந்தது.

பதில் தெரியவில்லை. பதில் தெரியவில்லையே தவிர, பார்வதி யின் உள்ளம் அப்பொழுது எதனாலோ இளகிவிட்டது. சட்டென்று கோலத்தை முடித்து விட்டு உள்ளே போய் அடுப்பை மூட்டிக் காப்பிக்கு ஜலம் வைத்தாள்.

சிவராமனுக்கும் இரவு தூக்கம் இல்லை. அவன் படுக்கையே போட்டுக்கொள்ளவில்லை. நாற்காலியிலேயே சாய்ந்துவிட்டான்.

பார்வதி இந்தமாதிரிக் கலகம் மூட்டினது (அவள் மூட்டினதாக அவனுக்குப் பட்டது) முதல் தடவையல்ல. எத்தனையோ நாட்கள் அவன் வீட்டில் சுகமாக மனைவியின் முகத்தைப் பார்த்து ஆபீஸ் தொல்லைகளை மறக்கலாம் என்று வந்தபோது பார்வதி இந்தமாதிரி ஏதாவதொன்றைக் கிளப்பினதாகத் தோன்றிற்று.

ஏன் இப்படி? இந்த மாதிரித்தானா வாழ்க்கை எங்கும் நடைபெறு கிறது? ஒரு நாள் விட்டு ஒரு நாள் இந்தத் துன்பம் என்றால் கணவன் மனைவி என்று ஏன் வாழவேண்டும்?'

'நானும் சில சமயங்களில் பிசகு செய்யலாம். முழுப் பிசகும் என்னுடையதுதானா? பார்வதி பிசகே செய்வதில்லையா? என்னை மட்டும் ஏன் இப்படித் துன்புறுத்துகிறாள்? நான் என்ன குறைவு செய்து விட்டேன்?'

சிவராமன் பார்வதியின் வார்த்தைக்கு அந்நியதா சொல்லுவதில்லை – எதிலும் – அநேகமாக அவனால் முடிந்த வரையில். சில சின்ன விஷயங்கள் என்று அவன் எண்ணினவற்றை அவள் பெரியனவாக நினைத்தாள்.

'இதுகூட' என்றாள் அவள்.

'இதுதானே!' என்றான் அவன்.

இந்தச் சிக்கலுக்கு என்ன பரிகாரம் என்று அவனுக்குத் தெரிய வில்லை. எண்ணி எண்ணி ஓய்ந்து போய் அப்படியே அதிகாலையில் தூங்கிவிட்டான்.

ஜலம் போட்டுவிட்டு வந்தவள் அந்தக் காட்சியைப் பார்த்தாள். துக்கம் திடீரென்று பொங்கி மார்பை அடைத்தது.

'பகலெல்லாம் அந்தப் பாவிமுன் நின்றுவிட்டு வந்தால் இரவில் நான் பாவி–தூங்கவிடவில்லையே!' என்று எண்ணி அழுதாள். அவனை எழுப்ப மனம் வரவில்லை. தானும் காப்பி சாப்பிடாமல் வைத்து விட்டுச் சமையல் வேலையை ஆரம்பித்தாள்.

'யஜமான்!'

சிவராமன் திடுக்கிட்டுக் கண்விழித்து எழுந்து உட்கார்ந்தான்.

'யாரது?'

'யதிராஜு, யஜமான்!'

'என்ன?'

'யஜமான் கூட்டியாரச் சொன்னாரு!'

'போங்கடா எங்கேயாவது, நீயும் உன் யஜமானும்!' என்று இரைந்து விட்டு சிவராமன் எழுந்து பல் தேய்த்துவிட்டு உடை அணிந்துகொண்டு வெளியே புறப்பட்டான்.

பார்வதி எதிரே வந்து தாழ்ந்த குரலில், 'காப்பி சாப்பிட்டுவிட்டு–' என்று இழுத்தாள்.

'எல்லாம் நீயே சாப்பிடு!' என்று சொல்லிவிட்டு சிவராமன் ரேழிக்குப் போனான்.

'பதில் சொல்லவில்லை; இனிமேல் பதில் சொல்லவில்லை, பதிலே சொல்லவில்லை!' என்று பார்வதி தன்னை அறியாமல் அலறினாள்.

குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுச் சிவராமன் திரும்பிப் பார்த்தான். பார்வதி தள்ளாடி விழுபவள் போலத் தடுமாறினாள்.

சிவராமன் ஒரே பாய்ச்சலாகத் திரும்பிவந்து அவளைத் தாங்கிப் பிடித்துக்கொண்டான்.

'பார்வதி, என்ன, என்ன வேண்டும்?'

'எனக்கு ஒன்றும் வேண்டாம்–பேசல்லே–சுமுகமாக இருங்கள்; போரும்!'

அடுத்த வீட்டில், 'சாந்த–சுக வாழ்வு வாழ வேண்டும்–வேறென்ன வேண்டும்?' என்று கிராமொபோன் தட்டு பாடும் சத்தம் கேட்டது.

●